2014 - இதழ் 11

இலவசம்



# உள்ளான மனிதன்

"கிறிஸ்து இயேசுவுக்குள் தேவன் அழைத்த பரம அழைப்பின் பந்தயப் பொருளுக்காக இலக்கை நோக்கித் தொடருகிறேன்" பிலிப்பியர் 3:14

## THE INNER MAN

MONTHLY FREE MAGAZINE – 2014 ISSUE 11

PRODUCED AND PRESENTED BY GRACE TABERNACLE APOSTOLIC CHURCH

FIND E-COPY AT www.gtachurchnet.ca

# உள்ளான மனிதன்

## உள்ளே..........

நல்ல பங்கு ..........................................02

விசுவாசமும் பிரமாணிக்கமும்...................04

பிரசங்கக் குறிப்புகள்....................................07

ஜெபம் செய்வோம் ...................................09

காலத்திற்கு முந்தின தீர்ப்பு .......................10

சத்தியவேதம் ...........................................12

"உள்ளான மனிதன்" மாதாந்த சஞ்சிகையை தபால் மூலம் உங்கள் இல்லங்களுக்கு இலவசமாக பெற விரும்பினால், கீழ்க்காணும் முகவரிக்கு உங்கள் முகவரியை எழுதி அனுப்புங்கள்.

**THE INNER MAN – GTAC**
**7700 MARKHAM ROAD**
**P. O. BOX 3051**
**MARKHAM, ON L3S 4T1**

**GRACE TABERNACLE APOSTOLIC CHURCH** – www.gtaCHURCHnet.ca
**e-mail: innerman.info@yahoo.com ☎ 416.613.2909**

# நல்ல பங்கு

போதகர் ரஞ்சிற் கொன்ஸ்ரன்ரைன்

நல்ல பங்கு எல்லா மனிதர்களும் விரும்பும் ஒன்று. கடைகளில் பொருட்களை வாங்கும் போது நலமானவற்றை தெரிந்து எடுக்கின் றோம். ஒரு வேளை தரமான பொருளை எடுக்கத் தவறினோம் என்று அறியும் போது கவலை கொள்கின்றோம். எனது பணம், எனது பிரயாசம் வீணாயிற்று என்று வருந்துகின்றோம். பெற்றோர்கள் தமது பிள்ளைகளுக்கு பாடசாலையைத் தெரிவதிலும் நல்ல பாடசாலை எது என்று ஆராய்கின்றார்கள். யார் வகுப்பாசிரியர் என்பதிலும் கரிசனை செலுத்துகின்றார்கள். காரணம் நல்லபங்கு வேண்டும் என்பதே. பிள்ளை களும், பெற்றோர்கள் தமது சொத்துக்களை பகிர்ந்து கொடுக்கும் வேளைகளில், அந்த சொத்துக்களில் உச்சிதமானவற்றிலும் தமக்கு பங்கு வேண்டும் என்று கேட்பார்கள். நல்ல பங்கை எல்லோரும் அடைய விரும்புகின்றார்கள்.

பரிசுத்த வேதாகமத்திலே "**தன் தாயின் கர்ப்பத்திலிருந்து நிர்வாணியாய் வந்தான், வந்ததுபோலவே நிர்வாணியாய்த் திரும்பப் போவான், அவன் தன் பிரயாசத்தினால் உண்டான பலனொன்றையும் தன் கையிலே எடுத்துக் கொண்டுபோவதில்லை. அவன் வந்தபிரகாரமே போகிறான், இதுவும் கொடுமையான தீங்கு, அவன் காற்றுக்குப் பிரயாசப்பட்ட தினால் அவனுக்கு லாபம் என்ன?**" (பிரசங்கி 5:15-16) என்று கூறப்பட்டுள்ளது. அப்படியானால், மனிதனின் பிரயாசம் பலனற்றதோ? ஒருவரின் பிரயாசத்தின் பலன் அவர் எதற்காக பிரயாசப்படுகின்றார், எப்படி பிரயாசப்படுகின்றார் என்பதில் தங்கியுள்ளது.

இந்த உலகத்திலிருந்து நாம் எதையும் எம்முடன் எடுத்துக் கொண்டு போவதில்லை. மாறாக எமது சந்ததிக்கோ அல்லது வேறோருவருக்கு அவற்றை விட்டுச் செல்லுகின்றோம். அந்த பிரயாசத்தின் பலனானது இவ்வுலக வாழ்வுக்கு என்றே மட்டுப்படுத்தப்பட்டுள்ளது. பலர் இதற கென்று மிகவும் பிரயாசப்படுகின்றார்கள். தீய வழிகளிலாகிலும் பணம் சம்பாதிப்போம் என்று வாழ்பவர்களும் இருக்கின்றர்கள். இன்னும் சிலர் சோம்பலினால் அல்லது நிர்விசாரத்தினால் எதுவுமே செய்யா திருக்கி ன்றார்கள்.

ஒரு முறை இயேசுகிறிஸ்து ஒரு கிராமத்தில் பிரவேசித்தார். அங்கே மார்த்தாள் என்னும் பேர்கொண்ட ஒரு ஸ்திரீ அவளைத் தன் வீட்டிலே ஏற்றுக்கொண்டாள். அவளுக்கு மரியாள் என்னப்பட்ட ஒரு சகோதரி இருந்தாள், அந்த மரியாள் இயேசுவின் பாதத்தருகே உட்கார்ந்து, அவருடைய வசனத்தைக் கேட்டுக்கொண்டிருந்தாள். மார்த்தாளோ

பற்பல வேலைகளைச் செய்வதில் மிகவும் வருத்தமடைந்து, இயேசுவிடத்தில் வந்து: ஆண்டவரே, நான் தனியே வேலைசெய்யும்படி என் சகோதரி என்னை விட்டுவந்திருக்கிறதைக் குறித்து உமக்குக் கவையில்லையா? எனக்கு உதவி செய்யும்படி அவளுக்குச் சொல்லும் என்றாள்.
இயேசு அவளுக்குப் பிரதியுத்தரமாக: **மார்த்தாளே, நீ அநேக காரியங்களைக்குறித்துக் கவலைப்பட்டுக் கலங்குகிறாய். தேவையானது ஒன்றே, மரியாள் தன்னை விட்டெடுபடாத நல்ல பங்கைத் தெரிந்துகொண்டாள் என்றார்**.

இயேசு, வீட்டு வேலைகள் செய்வது அவசியமற்றது என்று கூறவில்லை. மாறாக அந்த மார்த்தாள் என்ற பெண் எதைக் குறித்து அதிக கவலை கொண்டுள்ளாள் என்பதையும், பரலோக இராச்சிய த்துக்கு என்று ஒருவர் படும் பிரயாசமானது ஒருபோதும் அவரை விட்டு எடுபடாத நல்ல பங்கு என்று விளக்கிக் கூறினார். மேலும் இவ்வுலக செல்வத்தைக்குறித்து **"இவைகளையெல்லாம் அஞ்ஞானிகள்** (தேவ னை அறியாதவர்கள்) **நாடித்தேடுகிறார்கள், இவைகளெல்லாம் உங்களுக்கு வேண்டியவைகள் என்று உங்கள் பரமபிதா** (தேவன்) **அறிந்திருக்கிறார். முதலாவது தேவனுடைய ராஜ்யத்தையும் அவருடைய நீதியையும் தேடுங்கள், அப்பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக்கூடக் கொடுக்கப்படும்."** என்று இயேசு கூறியுள்ளார்.

பிரியமான சகோதரனே, சகோதரியே!

வாழ்க்கையில் மிகவும் பிரயாசப்பட்டு இறுதியில், இவ்வுலக வாழ்க்கை முடித்து தேவனை சந்திக்கும் நாளிலே, உங்களிடத்தில் நல்ல பங்கு காணப்படாது இருக்குமானால் உங்கள் பிரயாசத்தால் உங்களுக்கு என்ன பலன்?

இன்று உனது வாழ்க்கை மாறவேண்டும், வேண்டாத பாவ பழக்க ங்களிலிருந்து விடுதலை வேண்டும், நல்ல பங்கை உனது வாழ்வில் பெற்றுக்கொள்ள வேண்டும் என்று விரும்பினால், பாவியை நீதிமானா க்கின்ற இயேசுவே என் வாழ்வில் வாரும். என் பாவங்களை மன்னித்து எனக்கு பாவ பழக்கங்களிலிருந்து விடுதலை தாரும் என்று கூறுவா யாக.

# விசுவாசமும் பிரமாணிக்கமும்

ஒரு நாள் இயேசு சீஷ்ஷரோ டுகூட படகில் ஏறி கடலின் அக்கரைக்கு போவோம் வாருங்கள் என்றார்: அப்படியே அவர்கள் புறப்பட்டுப் போனார்கள். படகு ஓடுகையில் அவர் நித்திரையாகயிருந்தார். அப்பொழுது கடலிலே சுழல்காற்று உண்டானதால், அவர்கள் மோசமடையத்தக்கதாய் படகு ஜலத்தினால் நிறைந்தது. கப்பலின் பின்னணயத்தில் அவர் தலையணையை வைத்து நித்திரையாயிருந்தார். அவர்கள் அவரை எழுப்பி: போதகரே, நாங்கள் மடிந்து போகிறது உமக்கு கவலையில்லையா என்றார்கள்.



இயேசு எழுந்து, காற்றை அதட்டி, கடலை ப்பார்த்து: இரையாதே, அமைதலாயிரு என்றார். அப்பொழுது காற்று நின்றுபோய், மிகுந்த அமைதல் உண்டாயிற்று. அவர் அவர்களை நோக்கி: ஏன் இப்படிப் பயப்பட்டீ ர்கள்? ஏன் உங்களுக்கு விசுவாசம் இல்லாமற் போயிற்று என்றார்.

அவர்கள் மிகவும் பயந்து: இவர் யாரோ? காற்றும் கடலும் இவருக்குக் கீழ்படிகிறதே என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

இயேசுவோடு இருந்த சீஷர்கள், மீன்பிடி தொழிலில் நன்றாக பயிற்றுவிக்கப்பட்டவர்கள். இவர்களுக்கு அந்தக் கடல் ஒரு பதிய இடமும் அல்ல, புயல்களும் ஒரு புதிய காரியம் அல்ல. அன்று இயேசு இளைப்பாறிக்கொண்டிருந்தார், அது போல அவர்களுக்கும் அமைதல் தேவைப்பட்ட காலத்திலே, தீடிரென சந்தித்த புயலிலே கலங்கிப்போனார்கள்.

எங்களுடைய வாழ்க்கையிலும் புயல் போன்ற சோதனைகள் எதிர்பாராத நேரத்தில் வந்து எங்களை கலங்கப்பண்ணலாம். ஆனால் அந்த சூழ்நிலைகளால் வரும் அழுத்தத்திற்கு நாங்கள் அடி பணிந்து விடக்கூடாது. சந்தர்ப்பத்திற்கு தக்க பிரகாரமாக எங்கள் வாழ்க்கை முறையை மாற்றி எங்கள் விசுவாசத்தை தளரவிடக்கூடாது. மாறாக எந்த சூழ்நிலையிலும், நாங்கள் இயேசுவின் மேல் கொண்ட விசுவாசத்தில் மென்மேலும் உறுதிப்படவேண்டும். விசுவாசத்தினால் இயேசுவின் நாமத்தில் நாங்கள் ஜெபித்து, அவர் வழி நடத்தலோடு எதிரிடையானவற்றை வெற்றி பெறவேண்டும்.

சீஷர்கள் இயேசுவோடு வாழ்ந்திருந்தும், அவர் செய்த அற்புதங்களை கண்டிருந்தும், அவர் வல்லமையை குறைத்து எடைபோட்டிருந்தார்கள். துரைத்தனதிற்கும், அதிகாரத்திற்கும், வல்லமைக்கும், கர்த்தத்துவ திற்கும், இம்மையில் மாத்திரமல்ல, மறுமையிலும் பேர் பெற்றிருக்கும் எல்லா நாமத்திற்கும் உயர்ந்த நாமம், இயேசுவின் நாமம்!

வேதாகமத்திலே சங்கீத புத்தகத்திலே, "உமது நிமித்தம் எந்நேரமும் கொல்லப்படுகின்றோம்: அடிக்கப்படும் ஆடுகளைப்போல எண்ணப்படு கிறோம். ஆண்டவரே, விழித்துக்கொள்ளும்: ஏன் நித்திரைபண்ணுகிறீர்? எழுந்தருளும், எங்களை என்றைக்கும் தள்ளிவிடாதிரும். எங்களுக்கு ஒத்தாசையாக எழுந்தருளும்: உம்முடைய கிருபையினிமித்தம் எங்களை மீட்டுவிடும்." (சங்கீதம் 44) என்று இதை எழுதியவர் தன் நெருக்கத்திலே தேவனை நோக்கி முறையிட்டார். தேவன் தன்னை முற்றிலும் தள்ளிவிட்டார் என்று கூறவில்லை. எல்லாம் தேவனின் கட்டுப்பாட்டில் தான் இருக்கின்றது என்று விசுவாசித்தபடியால்தான் "உம்முடைய கிருபையின் நிமித்தம் எங்களை மீட்டுவிடும்" என்று கூறுகின்றார். ஆனால் ஏன் தேவன் மௌனமாக இருக்கின்றார் என்பதை குறித்த கேள்வி அவர் உள்ளத்தில் எழுந்திருந்தது.

தேவ மனுஷனாகிய பவுல், முன்பு சமூதாயத்தில் நல்ல அந்தஸ்துடன் வாழ்ந்த அவர், இயேசுவின் நற்செய்திக்காக பலவிதமான உபத்திரவ ங்களுக்கூடாக சென்றார். பல தரம் அடிக்கப்பட்டார், சிறைச்சாலையிலே போடப்பட்டார். அவர் இக்காரியத்தைக் குறித்து எழுதும் போது, "உமது நிமித்தம் எந்நேரமும் கொல்லப்படுகின்றோம்: அடிக்கப்படும் ஆடுகளை ப்போல எண்ணப்படுகிறோம் என்ன நேரிட்டாலும், கிறிஸ்து வின் அன்பைவிட்டு நம்மைப் பிரிப்பவன் யார்? உபத்திரவமோ, வியாகுலமோ, துன்பமோ, பசியோ, நிர்வாணமோ, நாசமோசமோ, பட்டயமோ? இவையெல்லாவற்றிலும் நாம் நம்மில் அன்புகூருகிறவராலே முற்றும் ஜெயங்கொள்ளுகிறவர்க ளாயிருக்கிறோமே. மரணமானாலும், ஜீவனா னாலும், தேவ தூதர்களானாலும், அதிகாரங்களானாலும், வல்ல மைகளானாலும், நிகழ்காரியங்களானாலும், வருங்காரியங்களானாலும், உயர்வானாலும், தாழ்வானாலும், வேறெந்தச் சிருஷ்டியானாலும் நம்மு டைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவிலுள்ள தேவனுடைய அன்பை விட்டு நம்மைப் பிரிக்கமாட்டாதென்று நிச்சயித்திருக்கிறேன்" என்று தன்னுடைய விசுவாசத்தை (Faith) அறிக்கை யிடுவதுடன், என்ன நடந் தாலும் என்னை அழைத்த இயேசுவுக்கு பிரமாணிக்கம் உள்ளவனாக (நம்பிக்கைக்கு பாத்திரனாக) இருப்பேன் என உறுதி கூறினார்.

இயேசுவைக் குறித்த எங்கள் விசுவாசமும் பிரமாணிக்கமும் எந்நிலையில் இருக்கின்றது?

வல்லமையான பாபிலோன் ராஜ்யத்தை ஆட்சி செய்த நேபுகாத்நேச்சர், இஸ்ரவேலிலிருந்து சில வாலிபரை தனக்கு ஊழியம் செய்வதற்காக

சிறைப்பிடித்து போயிருந்தார். ஒரு சமயத்திலே, பாபிலோனிலிருந்த எல்லோரும் அந்த பேரரசனை வணங்க வேண்டும் எனவும், அவனை வணங்காத எவரையும் எரிகின்ற அக்கினிச் சூளையில் போடுவதாகவும் இராச கட்டளை பிறப்பிக்கப்பட்டது. ஆனால் சாத்திராக் மேஷக் ஆபேத்நேகோ என்று அழைக்கப்பட்ட இஸ்ரவேலை சேர்ந்தவர்கள், வணங்க மறுத்தார்கள். அவர்களை கட்டி அக்கினிச் சூலைக்குள் போட போகும் போது, அவர்கள் சொன்னார்கள் "ராஜாவே எங்கள் தேவன் இந்த அக்கினிச் சூளையில் இருந்து எங்களை விடுவிக்க வல்லவர், அவர் விடுவியாமற்போனாலும், நாங்கள் உம்மை வணங்குவதில்லை" என்று திட்டமாகச் சொன்னார்கள். அவர்கள் அக்கினிச் சூளையில் போடப்பட்டபோதும் அற்புதவிதமாக தேவன் அவர்களை காப்பாற்றினார். தேவன் விடுவிக்காவிட்டாலும், அவர்தான் தேவன், அவரை மாத்திரம் தான் நாங்கள் வணங்குவோம் என்று அந்த இஸ்ரவேலர் தாங்கள் தேவன்மேல் கொண்ட இராஜ விசுவாசத்தை விளங்கப்பண்ணினார்கள்.

வாழ்க்கையில் புயல் போன்ற சம்பவங்கள் கலங்கப்பண்ணும் போது, இயேசுவில் நாங்கள் வைத்திருக்கும் விசுவாசமும், எங்கள் பிரமாணிக்கமும் சோதிக்கப்படும். இயேசு சர்வ வல்லமையுள்ளவர்! அவர் ஒரு வார்த்தை சொன்னால் போதும். இரையாதே! என்று சொன்னபோது கடல் அடங்கியது! இப்படியாக எங்கள் வாழ்வின் புயல்களை அடக்க வல்லவராகவே இருக்கின்றார். எங்கள் விசுவாசமும் பிரமாணிக்கமும் எவ்வளவாக உள்ளது?

****************

# "முற்றிலும் ஜெயம்"

# பிரசங்கக் குறிப்புகள்

**[IF YOU WOULD LIKE TO LISTEN TO THE FULL VERSION OF THIS MESSAGE IN ENGLISH OR TAMIL, FOLLOW THE LINK THAT IS PROVIDED AT THE END THIS SERMON NOTES]**

சங்கீதம் 84:1-7 வசனங்களை வாசிப்போம். இதில் குறிப்பாக மூன்று காரியங்களை நாங்கள் பார்க்கப்போகின்றோம்

1. உம்மிலே பெலன்கொள்ளுகிற மனுஷனும், தங்கள் இருதயங்களில் செவ்வையான வழிகளைக் கொண்டிருக்கிறவர்களும் பாக்கியவான்கள்
2. அவர்கள் பலத்தின் மேல் பலனடைந்து,
3. அவர்கள் பலத்தின் மேல் பலனடைந்து, சீயோனிலே தேவ சந்நிதியில் வந்து காணப்படுவார்கள்

நியாயதிபதிகளின் புஸ்தகத்திலே யோசுவாவின் நாட்களுக்கு பின்பு, இஸ்ரவேலர் முரட்டாட்டம் பண்ணின நாட்கள் அநேகம் உண்டு. தங்கள் இக்கட்டிலே அவர்கள் தேவனை தேடும் போது, அவர் ஒரு நியாயாதிபதியை எழுப்பி அவர்களை மீட்பார், ஆனால் மறுபடியும் அவர்கள் தேவனை மறந்து தங்கள் பொல்லாத வழிகளுக்கு திரும்பி செல்வார்கள். இது ஒரு தொடர்கதை போல நடந்து வந்தது.

நியாயாதிபதிகள் 4:4 வாசிப்போம் - அந்நாட்களிலே சீரிய ராஜாவாகிய செசெரா என்னும் ராஜாவினால் இஸ்ரவேலர் மிகவும் ஒடுக்கப்பட்டு வந்தார்கள். பலமுள்ள சேனையும் தொளாயிரம் இருப்பு இரதங்களும் செசெராவிற்கு இருந்தது. தெபோராள் என்னும் ஒரு தீர்க்கதரிசி இஸ்ரவேலிலே நியாயம் விசாரித்து வந்தாள். அவள் பாராக் என்னும் மனுஷனை அழைப்பித்து தேவ செய்தியை கூறினாள், தேவன் அவனூடாக இஸ்ரவேலரை இரட்சித்தார்.

அந்நாட்களிலே அவர்கள் தங்கள் பாவங்களை அறிக்கையிட்டார்கள், தேவனுடைய தீர்க்கதரிசி இருக்கின்றாள் என தெபோராவிடம் சென்றார்கள். இது அவர்கள் உள்ளத்திலுள்ள மாறுதலையும் கீழ்படிவையும் காண்பிக்கின்றது.

இஸ்ரவேலர் தேவனுடைய வார்த்தைக்கு செவி கொடுக்கும் போது, அவர்கள் வழி செம்மையாயிற்று. இதனால் அவர்களுக்கு பலமுள்ள இராணுவத்திலிருந்து இரட்சிப்பு உண்டாயிற்று. தேவன் அவர்களுடன்

இருந்தார், கர்த்தருக்கு முன்பாக இருப்பு இரதங்களும் நிலை நிற்கமுடியவில்லை. எதிரிகள் தாழ்த்தப்பட்டார்கள். அவர்கள் எதிரியை மேற்கொண்டு சீரியாவின் ராஜாவை அழிக்கும்வரைக்கும் இஸ்ரவேலர் கை பலமடைந்து கொண்டே வந்தது. அவர்கள் பெலத்தின் மேல் பெலன் அடைந்தார்கள்.

இன்று மனிதர்களின் வாழ்க்கையில் ஒரு வெற்றி வந்தவுடன் திருப்தியடைந்து விடுகின்றார்கள். பெலத்தில் மேல் பெலனடைய முன் செல்லாமல், கிடைத்த வெற்றியுடன் வாழ்ந்துவிடலாம் என நினைக்கின்றார்கள். ஆனால் எங்களுடைய யுத்தம் தொடர்சியானது, மாம்சத்துடனும் இரத்தத்துடனும் அல்ல, அந்தகார வல்லமைகளோடு யுத்தம் செய்ய நாங்கள் ஆயத்தமாக இருக்க வேண்டும். பலத்தின் மேல் பெலடைய வேண்டும்.

எத்தனை விசுவாசிகள் நாளாந்தம் குடும்ப ஜெபம் செய்கின்றார்கள்? அல்லது எத்தனை விசுவாசிகள் குறைந்தது மாததிற்கு ஒரு முறையாவது ஜெபம் செய்கின்றார்கள்? மற்ற எல்ல காரியங்களுக்கு நேரமுண்டு ஆனால் ஜெபத்திற்கு நேரமில்லை.

நப்தலி, செபுலோன் கோத்திரத்தாரிலே பதினாயிரம் பேர்கள் சென்று இருப்பு இரதங்களுடன் வந்த எதிரிகளை முறியடித்தார்கள். காரணம் என்ன? இவர்கள் கர்த்தருக்கு முன்பாக தங்கள் வழிகளை செம்மைப் படுத்திக் கொண்டார்கள், தேவனுடைய வார்த்தைக்கு தேவனுடைய நியாயத்திற்கு இடங்கொடுத்தார்கள், தேவனை சார்ந்து கொண்டார்கள், பெலத்தின் மேல் பெலன் அடைந்தார்கள்.

நாங்கள் ஒரு ஜெயத்துடன் திருப்த்தி அடையக்கூடாது, முற்றிலும் ஜெயம் கொள்ளவேண்டும். இந்த மனிதர்களின் வாழ்க்கையில் துன்பம் இருந்தது, அழுகையின் பள்ளத்தாக்கில் நடக்க வேண்டியிருந்தது, அவர்களின் நெருக்கத்தின் மத்தியில் அவர்கள் பின்னிட்டு ஓடிப்போவதில்லை. அவர்கள் அழுகையின் பள்ளத்தாக்கை உருவ நடந்து நீரூற்றாக்கிக் கொள்கின்றார்கள்.

வாழ்க்கையில் மகா நெருக்கத்தில் இருந்த மனிதர்கள் ஆனால் தங்கள் இருதயத்தில் செம்மையான வழியை கொண்டிருந்தார்கள். கர்த்தரை தங்கள் பெலனாய் கொண்ட மனிதர்கள் பாக்கியவான்கள். அவர்கள் பெலத்தின் மேல் பெலனடைந்து, சீயோனிலே தேவ சந்நிதியில் வந்து காணப்படுவார்கள்.

**[இந்த தேவ செய்தியை முழுமையாக கேட்க விரும்பினால், பின்வரும் இணையத் தளத்தில்** (Internet **இல்**) **தமிழ் ஆங்கில மொழிகளில் கேட்க முடியும்.]**

**www.gtaCHURCHnet.ca\im**

# ஜெபம் செய்வோம்!

உங்கள் வாழ்க்கையை சர்வ வல்லமையுள்ள பிதவாகிய தேவனிடம் ஒப்படைக்க விரும்பினால், பின்வரும் ஜெபத்தை கருத்தோடு ஏறெடுங்கள்!

பரலோகத்தில் இருக்கின்ற எங்கள் அன்பான பிதாவே,

நீர் சர்வ வல்லமையுள்ள தேவன்! உம்முடைய குமாரனாகிய இயேசுக் கிறிஸ் துவை எங்களுக்காக தந்தருளினதிற்காக உமக்கு நன்றி! இயேசுக்கிறிஸ்துவு க்கூடாக நீர் அனுப்பின தேற்றரவாளனாகிய பரிசுத்த ஆவியானவருக்காக உமக்கு நன்றி!

கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து இப்பூமியில் மனிதனாக வந்து, பரிசுத்தமான வாழ்க்கை வாழ்ந்து, என்னை மீட்பதற்காக பாடுகள் பட்டு தம்முடைய பரிசுத்தமான இரத்தத்தை சிந்தி, சிலுவையிலே எனக்காக மரித்து, பாவத்தை வென்று உயிர்ந்தெழுந்தார் என முற்றிலும் விசுவாசிக்கின்றேன். இன்று நான் ஆண்டவராகிய இயேசுக்கிறிஸ்துவை என் வாழ்வின் சொந்த இரட்சகராக ஏற்றுக்கொள்கின்றேன்! இதுவரைகாலமும் நீர் என்னை நடத்தி வந்த உம்முடைய மிகுந்த இரக்கங்களுக்காக உமக்கு ஸ்தோத்திரம்!

மற்றவர்களை குறித்திருக்கின்ற கசப்பை என் மனத்தில் இருந்து அகற்றிவிட இன்று நான் தீர்மானிக்கின்றேன்! பிறர் எனக்கு செய்த குற்றங்களை மன்னித்துவிட இன்று நான் தீர்மானம் எடுக்கின்றேன். பரிசுத்த ஆவியானவரே எனக்குத் துணைசெய்யும்!

என்னுடைய பாவ பழக்கங்களை விட்டுவிட இன்று நான் தீர்மானிக்கின்றேன். நான் அறிந்தும் அறியாமலும் செய்த பாவங்களை மன்னித்தருளும்! இன்னும் நான் உணராமல் செய்துவரும் தீய பழக்கங்கள் என்னில் இருக்குமாயின் அவைகளை எனக்கு வெளிப்படுத்தும். பரிசுத்த ஆவியானவரே இவை யாவற்றிலிருந்தும் விடுதலை பெற்று மனம் பரிசுத்தம் அடைய எனக்கு உதவி செய்யும்!

தேவனே, மோட்ச வாழ்க்கைக்கு அவசியமானதை என் வாழ்க்கையிலே முதலாவதாக நான் தேட என்னை வழி நடத்தும். இன்று நான் என்னுடைய தேவைகளை உம்முடைய பாதத்தில் வைக்கின்றேன், என் இக்கட்டான சூழ்நிலையிலிருந்து என்னை பூரணமாக விடுவித்து தேவ சமாதானம் என் உள்ளத்தை ஆழ கிருபை செய்தருளும்.

கர்த்தாவே நீர் என்னுடைய ஜெபத்தைக் கேட்டு அதற்கு பதில் தருகின்ற ஜீவனுள்ள தேவன் என்று நான் முற்றிலும் விசுவாசிக்கின்றேன்! உம்மை உண்மையாய் தேடுகிற யாவருக்கும் சமீபமாகவுள்ள கர்த்தர் நீர்! பலமுள்ளவனுக்காகிலும் பலனற்றவனுக்காகிலும் உதவி செய்வது உமக்கு லேசான காரியம்!
எனக்காக மரித்து உயிர்த்த கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபம் கேட்கிறேன் நல்ல பிதாவே, ஆமென்!

# காலத்திற்கு முந்தின தீர்ப்பு

ஆயிரத்து தொளாயிரத்து எண்பத்தெட்டாம் ஆண்டு, சியோல், தென் கொரியா (Seoul, South Korea) மாநகரத்திலே நடந்த கோடை கால ஒலிப்பிக் போட்டிகளில், கனடிய நூறு மீற்றர் ஓட்ட வீரரான பென் ஜோன்சன் (Ben Johnson) அவர்களின் சம்பவம் பலரின் கவனத்தை கவர்ந்து கொண்டது. மிக வேகமாக ஓடி முதலிடத்தை பெற்றுக்கொண்ட போது, கனடா பிரஜைகளுக்கு மிகவும் பெருமை தரும் சாதனையாக அந்நிகழ்வு அமைந்தது. ஆனாலும் அந்த மேன்மை 55 மணித்தியாலங்களில் கனடா தேசத்திற்கே ஒரு அவமானமாக மாறிவிட்டது. பென் ஜோன்சன் உடற் செயற்பாட்டை ஊக்குவிக்கும் போதைவஸ்தை பாவித்ததால், தங்க பதக்கம் பறி முதல் செய்து, உடனடியாக கனடாவிற்கு திருப்பி அனுப்பப்பட்டார். இந்த தீர்ப்பை சர்வதேச ஒலிம்பிக் அமைப்பினால் வழங்கப்பட்டது.
ஓட்டம் முடிந்து 55 மணித்தியாலங்களுக்கு அவர் உலகத்திலே வேகமான மனிதன் என்ற பெயரைப் பெற்று, பிரபலமான மனிதனானார். எல்லாம் சிறப்பாகவே இருந்தது, ஆனால் மூன்று நாட்களுக்குள் இறுதியும் முடிவான தீர்ப்பும் வழங்கப்பட்டது. யார்தான் இதை எதிர்பார்த்திருந்தார்கள்? போதைவஸ்தை உட்கொண்டவருக்கு அது நன்றாகவே தெரியும், குறித்த காலம் வந்த போது யாவருக்கும் அது தெளிவானது.

ஆவணி 12, 1986 ல், மைக்கல் மோர்ட்ரன் என்பவர் தனது 32 வது பிறந்த தினத்தை தனது மனைவியுடனும், 3 வயது மகனுடனும் கொண்டாடி முடித்த அடுத்த நாள் அவர் மனைவி, வீட்டிலே படுகொலை செய்யப்பட்டிருந்தாள். அந்தக் கொலைக்கு அவள் கணவர் மைக்கல் மோர்ட்ரன் தான் காரணம் என்று நீதி மன்றம் தீர்ப்பு வழங்கியது. சுமார் 25 வருடங்களை சிறையிலே செலவிட்ட பின்பு, ஐப்பசி 11, 2011 ல் அவர் நிரபராதி என்று தீர்க்கப்பட்டு, அவரது 57 வயதிலே விடுதலையாக்கப்பட்டார்.

அரச தரப்பு வழக்கறிஞர் சில முக்கிய தகவல்களை கணக்கில் எடுக்க தவறினதால் அவர் குற்றவாளியாக தீர்க்கப்பட்டார். 2011 ல் அந்த வழக்கறிஞர் ஒரு நீதிபதியாக இருந்தார். அவருக்கு கிடைத்த தண்டனை, நீதியரசர் பதிவியில் இருந்து ராஜிநாமா, 10 நாள் சிறை, $500 டொலர்கள் அபராதமுமாகும். அத்துடன் அந்த நீதிபதி மைக்கல் மோர்ட்ரனிடம் மன்னிப்பு கேட்டார்.

மைக்கல் மோர்ட்ரனை சிறையில் போட்ட போது, அவர் மனைவியின் இனத்தார்கள், தங்களுக்கு நீதி கிடைத்தது என்றும், மைக்கல் மோர்ட்ரனுக்கு நல்ல தீர்ப்பு கிடைத்ததென்றும் மனத்திருப்தியடை

ந்திருந்தார்கள். அவருடைய ஒரே மகன், அவர் தாயின் சகோதரி குடும்பத்துடன் வாழ்ந்து வந்தார், காலப்போக்கில் தன் தந்தையை பார்க்க மறுத்தான், தன்னுடைய குடும்பப் பெயரை மாற்றி, தாயாரின் சகோதரியின் குடும்பப் பெயரை பாவித்தான். 25 வருடங்களுக்கு பின் அவர்கள் யாவரும் ஏக்கமடைந்துள்ளார்கள். மனித நீதி குறைவுள்ளது! சரியான தகவல்களை ஆராய்ந்து பார்க்காமல் செய்யப்படும் தீர்ப்பு பூரணமாக இருக்காது.

காலம் நிறைவேற முன்பு, கிடைத்த குறுகிய தகவல்களோடு முடிவு எடுத்த அனுபவம் அநேகமாக யாவருக்கும் உண்டு. நினைத்த காரிய த்தை செய்தேன் என்ற மனத்திருப்தி அல்லாமல் இப்படியாக காலத்திற்கு முந்தின தீாப்பில் எந்த பலனும் கிடையாது. காலப்போ க்கில் இவைகளை நினைத்து பார்க்கும் போது, நான் இவ்வளவு மதீயினமாக செய்தேன் என வெட்கப்பட நேரிடும்.

சுய நீதியை எங்கள் வாழ்வில் நிறைவேற்றுவோமாக இருந்தால், தேவ நீதி எங்கள் வாழ்வில் நிறைவேறாது. அதனால் எங்ளுடைய ஆவிக்குரிய வாழ்க்கை தணிந்து போய்விடும். தேவன் அவனவனுடைய கிரியைகளுக்குத்தக்கதாய் அவனவனுக்குப் பலனளிப்பார் என பரிசுத்த வேதாகமம் கூறுகின்றது. (ரோமர் 2:6). ஆகவே, தேவ நீதி நிறைவே றும்வரை, பொறுமையோடு எங்கள் வாழ்க்கையில் தேவனுடைய சித்தத்தை செய்து கொண்டிருக்க வேண்டும்.

போடப்பட்டிருக்கிற அஸ்திபாரமாகிய இயேசுக்கிறிஸ்துவை அல்லாமல் வேறே அஸ்திபாரத்தைப் போட ஒருவனாலும் கூடாது. ஒருவன் அந்த அஸ்திபாரத்தின் மேல் பொன், வெள்ளி, விலையேறப்பெற்ற கல், மரம், புல், வைக்கோல் ஆகிய இவைகளால் கட்டினால், அவனவனுடைய வேலைப்பாடு வெளியாகும்: நாளானது அதை விளங்கப்பண்ணும். ஏனெனில் அது அக்கினியினாலே வெளிப்படுத்தப்படும்: அவனவனுடைய வேலைப்பாடு எத்தன்மையுள்ளதென்று அக்கினியானது பரிசோதிக்கும்.
என்னிடத்தில் நான் யாதொரு குற்றத்தையும் அறியேன்: ஆகிலும் அதினாலே நான் நீதிமானாகிறதில்லை: என்னை நியாயம் விசாரிக்கி றவர் கர்த்தரே. ஆனதால், கர்த்தர் வருமளவும் நீங்கள் காலத்துக்கு முன்னே யாதொன்றையும் குறித்து தீர்ப்புச் சொல்லாதிருங்கள்: இருளில் மறைந்திருக்கிறவைகளை அவர் வெளியரங்கமாக்கி, இருதயங்களின் யோசனைகளையும் வெளிப்படுத்துவார்: அப்பொழுது அவனவனுக்குரிய புகழ்ச்சி உண்டாகும் என்று பரிசுத்த வேதாகமத்திலே வாசிக்கின்றோம் (1 கொரி 4).

ஆகவே காலத்திற்கு முன்பாக முடிவான தீர்ப்பை வழங்காதிருங்கள்!




# சத்திய வேதம்

## ஞானஸ்நானத்தைக் (திருமுழுக்கைக்) குறித்து பரிசுத்த வேதாகமம் கூறும் குறிப்புக்கள் என்ன?

அப்பொழுது யோவானால் ஞானஸ்நானம் பெறுவதற்கு இயேசு கலிலேயாவைவிட்டு யோர்தானனுக்கு அருகே அவனிடத்தில் வந்தார். யோவான் அவருக்குத் தடை செய்து: நான் உம்மாலே ஞானஸ்நானம் பெறவேண்டியதாயிருக்க, நீர் என்னிடத்தில் வரலாமா என்றான். இயேசு அவனுக்கு பிரதியுத்தரமாக: இப்பொழுது இடங்கொடு, இப்படி எல்லா நீதியையும் நிறைவேற்றுவது நமக்கு ஏற்றதாயிருக்கிறது என்றார். அப்பொழுது அவருக்கு இடங்கொடுத்தான்.

இயேசு ஞானஸ்நானம் பெற்று, ஜலத்திலிருந்து கரையேறினவுடனே, இதோ, வானம் அவருக்கு திறக்கப்பட்டது: தேவ ஆவி புறாவைப்போல இறங்கி, தம்மேல் வருகிறதைக் கண்டார். (மத்தேயு 3:13-17)

யூதருக்குள் அதிகாரியான நிக்கொதேமு என்னப்பட்ட பரிசேயன் ஒருவன் இராக்காலத்திலே இயேசுவை சந்திக்க வந்தான். இயேசு சொன்னார்: ஒருவன் மறுபடியும் பிறவாவிட்டால் தேவனுடைய ராஜ்ய த்தைக் காணமாட்டான் என்று மெய்யாகவே மெய்யாகவே உனக்குச் சொல்கின்றேன் என்றார்.

அதற்கு நிக்கொதேமு: ஒரு மனுஷன் முதிர்வயதாயிருக்கையில் எப்படிப் பிறப்பான்? அவன் தன் தாயின் கர்ப்பத்தில் இரண்டாந்தரம் பிரவேசி த்துப் பிறக்கக் கூடுமோ என்றான்.

இயேசு பிரதியுத்தரமாக: ஒருவன் ஜலத்தினாலும் ஆவியினாலும் பிறவாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிக்கமாட்டான் என்று மெய்யாகவே மெய்யாகவே உனக்குச் சொல்கின்றேன் என்றார். (யோவான் 3ம் அதிகாரம்)

இயேசுவைத் தவிர, ஆதாம் வழியாக இந்த உலகத்தில் பிறந்த எவருக்குள்ளும் பாவ வித்து உண்டு. இதிலிருந்து ஒரு மனிதன் தானா கவே விடுதலையாக முடியாது. இந்த பாவத்திலிருந்து மனிதர்களை பரிகரிக்க, பாவமறியா பரிசுத்தரான தேவ சுதனாகிய இயேசு மனிதனாக வந்து, பரிசுத்த வாழ்க்கை வாழ்ந்து, எங்கள் பாவங்களுக்காக பாடுகள் பட்டு, தம்முடைய விலைமதிக்கமுடியாத பரிசுத்த இரத்தத்தை சிந்தி,

சிலுவையிலே மரித்து, பாவத்தை ஜெயித்து, மூன்றாம் நாள் உயிரோடு எழுந்து, பின்பு பரலோகம் சென்றார்.

பாவத்திலிருந்து விடுதலை பெறவிரும்புகிற எவரும் இயேசுவே இரட்சகர் என்று உள்ளத்திலே விசுவாசிக்க வேண்டும். தேவன் தம்முடைய ஒரே பேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போ காமல் நித்திய ஜீவனை அடையும்படிக்கு, அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார்'' (யோவான் 3:16)

ஆகவே இயேசு இல்லாமல் மனித குலத்திற்கு இரட்சிப்பில்லை, ஒருவன் இரட்சிப்படைய விரும்பினால், இயேசுவே இரட்சகர் என்று தன் உள்ளத்திலே விசுவாசிக்க வேண்டும். அதாவது:

- பாவமறியா பரிசுத்தரான தேவ சுதனாகிய இயேசு மனிதனாக வந்து,
- பரிசுத்த வாழ்க்கை வாழ்ந்து, எங்கள் பாவங்களுக்காக பாடுகள் பட்டு,
- தம்முடைய விலைமதிக்கமுடியாத பரிசுத்த இரத்தத்தை சிந்தி, சிலுவையிலே மரித்து,
- பாவத்தை ஜெயித்து, மூன்றாம் நாள் உயிரோடு எழுந்து,
- பரலோகம் சென்றார் என்று உள்ளத்திலே விசுவாசித்து நாவினாலே அறிக்கையிட வேண்டும்.

இப்பபடியாக விசுவாசிக்கிறவர்கள், தங்கள் பாவத்திற்கென்று மரித்து, இயேசுவுக்குள் ஒரு புதிய மனிதனாக பிறக்கும் படியாக ஞானஸ்நான த்திற்குள் கடந்து செல்கின்றார்கள். (ரோமர் 6:4-5) இது சாதாரணமான வெளி அடையாளம் மட்டுமல்ல, இது தேவனோடு நாங்கள் செய்து கொள்ளும் உடன்படிக்கையாக இருக்கின்றது. ''ஞானஸ்நானமானது, மாம்ச அழுக்கை நீக்குதலாயிராமல், தேவனைப் பற்றும் நல்மனச் சாட்சியின் உடன்படிக்கையாயிருக்கிறது, இப்பொழுது நம்மையும் இயேசுக்கிறிஸ்துவினுடைய உயிர்தெழுதலினால் இரட்சிக்கிறது. (1 பேதுரு 3:21).

ஞானஸ்நானத்திலே அவரோடே (கிறிஸ்துவோடே) கூட அடக்கம்பண்ண ப்பட்டவர்களாகவும், அதிலே அவரை மரித்தோரிலிருந்தெழும்பின தேவனுடைய செயலின் மேலுள்ள விசுவாசத்தினாலே அவரோடே கூட எழுந்தவர்களாகவும் இருக்கின்றீர்கள் (கொலோசெயர் 2:12)

ஞானஸ்நானம் என்னும் பதத்தை எளிமையான தமிழ் நடையில் திருமுழுக்கு என்று சிறப்பாக மொழிபெயர்த்திருக்கின்றார்கள். அதில் ''திரு'' என்னும் பதம் அதன் மேன்மையையும் ''முழுக்கு'' என்னும் பதம், எப்படியாக ஞானஸ்நானம் பெற வேண்டுமென்பதை சிறப்பாக விளக்கிக் கூறுகின்றதல்லவா?

புது மனிதனாக பிறப்பதென்பது எங்கள் பழைய பாவ பழக்கத்தின்படி (கலாத்தியர் 5:19-21) வாழாமல், தேவ சித்தப்படி பரிசுத்த வாழ்க்கை (கலாத்தியர் 5:22-25) வாழ எங்களை அர்ப்பணிக்கின்றோம். இதனை சிலர் "மறுபடி பிறந்த கிறிஸ்தவன்" என சொல்லுவார்கள். இக்காரியத்தை இயேசு நிக்கொதேமுவிற்கு வெளிப்ப டுத்தினார். மறுபடி பிறந்தது ஒரு முடிவு அல்ல, ஒரு அழகான ஆரம்பம். இயேசுவை இரட்சகராக ஏற்றுக் கொள்ள முன் இருந்தது போல, உலகத்தின் நெருக்கமும் முன்பு இருந்தது போலவே இன்னும் அதிகமாக அழுத்தும். ஆனால் முன்பு போல அவைகளுக்கு அடிமையாகாமல் கிறிஸ்துவிற்குள் வெற்றி வாழ்க்கை வாழ, பாவத்தை கிறிஸ்துவைப் போல ஜெயம் கொள்ள, பரிசுத்த ஆவியானவரை தேவன் தாமே எமக்கு ஈவாக தந்துள்ளார். நீங்கள் கிறிஸ்துவோடே எழுந்ததுண்டானால், கிறிஸ்து தேவனுடைய வலதுபாரிசத்திலுள்ள மேலானவைகளைத் தேடுங்கள். பூமியிலுள்ளவைகளையல்ல, மேலா னவைகளையே நாடுங்கள் (கொலோசெயர் 3:1-2), தொடாந்தும், வேறுபிரிந்த, மறுபடி பிறந்த வாழ்க்கையைக் குறித்து கொலோசெயர் 3ம் அதிகாரத்தில் வாசிக்கலாம்.

தேவனை ஏற்றுக்கொண்ட நாம் எல்லோரும் தேவனுக்கு பிள்ளை களாயிருக்கின்றோம். தேவனுக்கு பேரப்பிள்ளைகள் இல்லை என்று சொல்லுவார்கள். ஆம்! ஒவ்வொருவரும் தேவனுக்கு மகனாக மகளாக மாறவேண்டும். வேறு ஒருவருக்காக நான் மனந்திரும்ப முடியாது! ஒவ்வொருவரும் தங்களுடைய பாவங்களுக்காக தாங்களே மனந்திரும்ப வேண்டும். கிறிஸ்துவை ஏற்றுக்கொண்ட பெற்றோர்கள், தங்கள் பிள்ளைகளை வேத வசனத்தின்படி தேவனுடைய ஒழுங்கிலும், தேவ பயத்திலும் வளர்க்க வேண்டியது பெற்றோர்களின் கடமை. பிள்ளைகள் வளர்ந்து, பாவத்தைக் குறித்த அறிவும், இரட்சிப்பின் அவசியத்தின் அறிவும் வந்த பின், அந்தப் பிள்ளைகள் தங்கள் சுயாதீன தீர்மானத்தின்படி, தங்கள் பாவத்தில் இருந்து மனந்திருமபி, இயேசுவை இரட்சகராக ஏற்றுக் கொண்டு, ஞானஸ்நானதின் ஊடாக உடன்படிக்கை செய்து மறுபடி பிறக்க வேண்டும். பாவத்தைக் குறித்த அறிவு இன்னும் வராத பிள்ளைகள் எப்படி மனந்திரும்புவார்கள்? எப்படி விசுவா சிப்பார்கள்? கிறிஸ்துவின் வழியில் வாழும் குடும்பதில் பிறப்பது ஒரு சிலாக்கியம் ஆனால் பிள்ளைகளுக்காக பெற்றோரும், பெற்றோருக்காக பிள்ளைகளும் மனந்திரும்பவோ விசுவாசிக்கவோ முடியாது.

இயேசு தம்முடைய பணியை முடித்து பரலோகம் செல்ல முன் சீஷர் களை நோக்கி சொன்னார் "விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான்: விசுவாசியாதவனோ ஆக்கினைகுள்ளாக தீர்க்கப்படுவான்" (மாற்கு 16:16) நீங்கள் மனந்திரும்பி, ஒவ்வொருவரும் பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளும் படியாக, பரிசுத்த பேதுரு தனது முதல் பிரசங்கத்திலே கூறினார். (அப் 2:38)

உங்களுக்கு உண்டான அழைப்பினாலே நீங்களும் ஒரே நம்பிக்கைக்கு அழைக்கப்பட்டதுபோல, ஒரே சரீரமும், ஒரே ஆவியுமுண்டு. ஒரே கர்த்தரும், ஒரே விசுவாசமும் ஒரே ஞானஸ்நானமும், எல்லாருக்கும் ஒரே தேவனும் ஒரே பிதாவும் உண்டு: என சத்திய வேதம் கூறுகின்றது (எபேசியர் 4:4-6)

ஞானஸ்நானம் என்பது ஒரு மதச் சடங்காச்சாரமோ அல்லது கிறிஸ்தவ பாரம்பரியமோ அல்ல! இது தேவனுடைய நீதி! இதன் அடிப்படை அம்சங்களை எங்கள் வாழ்க்கை முறைக்கு மாற்றியமைக்க இது ஒரு சாதாரண வெளிப்படையான அடையாளம் மட்டும் அல்ல! இது தேவன் அமைத்த ஒழுங்கு!

தேவன் எங்களுக்கு அளித்த சத்திய வேதம் பூரணமானது. தேவ காரியங்களை திட்டமாக வகையறுத்து கூறுகின்றது. எந்தக் காரியத்திலும் கருத்து வேறுபாடு வரும்போது, நாங்கள் பரிசுத்த வேதாகமம் என்ன கூறுகின்றது என அறிந்து கொள்ள வேண்டும்.

பாவத்தைக் குறித்த, மனந்திரும்புதலைக் குறித்த அறிவோ அல்லது உணர்வோ இல்லாத சமயத்திலே மனிதர்கள் இன்று ஞானஸ்நானத்தைக் கொடுக்கின்றார்கள். நாட்கள் செல்லும் போது இப்படியாக ஞானஸ்நானம் பெற்றவர்கள், தாங்கள் எல்லா தேவ காரியங்களையும் நிறைவேற்றிவிட்டோம் என்ற உணர்வுடன் தங்கள் பழைய வாழ்க்கையிலே வாழ்ந்துவிடுகின்றார்கள். தங்கள் சுயமாக மனந்திரும்பி தேவனுடன் உடன்படிக்கை செய்து கொள்ளுவதற்கான சந்தர்ப்பம் மறுபடியில்லாததால் அவர்கள் வாழ்க்கையில் பெயரளவு கிறிஸ்தவர்களாகவே இருந்து விடுகின்றார்கள்.

எத்தியோப்பிய மந்திரியிடம் பரிசுத்த ஆவியானவர் பிலிப்புவை அழைத்து சென்று, வேத வாக்கியத்தை விளக்கி,இயேசுவைக் குறித்து விளக்கிக் கூறினான். தண்ணீருள்ள ஓரிடத்திற்கு வந்தார்கள், அப்பொழுது மந்திரி: இதோ, தண்ணீர் இருக்கின்றதே, நான் ஞானஸ்நானம் பெறுவதற்குத் தடையென்ன என்றான். அதற்கு பிலிப்பு: நீர் முழு இருதயத்தோடும் விசுவாசித்தால் தடையில்லை என்றான். அப்பொழு அவன் (மந்திரி): இயேசுக் கிறிஸ்துவைத் தேவனுடைய குமாரனென்று விசுவாசிக்கின்றேன் என்றான். அவ்விடத்திலே இருவரும் தண்ணீரில் இறங்கினார்கள். மந்திரி ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டான் (அப் 8:26-39)

நாங்கள் சுயமாக விசுவாசித்து ஞானஸ்நானம் பெற வேண்டும். உண்மையாக தங்கள் உள்ளத்திலே பாவங்களுக்காக மனந்திரும்பி, கிறிஸ்துவை தரித்து, பரிசுத்த வாழ்க்கை வாழ தீர்மானம் செய்ய வேண்டும். நான் மறுபடி பிறந்த கிறிஸ்தவன் என்று சுலபமாக சொல்லிவிட்டு செல்வது ஞானஸ்நானமோ, அல்லது உண்மையான

கிறிஸ்தவ வாழ்க்கையோ அல்ல. அதே சமயத்தில் ஞானஸ்நானத்தை ஒரு சாதாரணமான சடங்காச்சாரமாக கொடுத்து விட முடியாது. கிறிஸ்துவை தரித்தவர்களாக, வேத ஒழுங்கின்படி வாழவேண்டும்.

************



# THE INNER MAN WORD PUZZLE

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| D | F | O | R | G | D | D | R | A | W | P | U |
| R | O | F | O | M | R | O | E | E | R | H | T |
| L | U | G | L | L | A | C | H | T | A | G | J |
| A | P | T | O | W | W | A | N | H | N | A | E |
| O | W | S | S | E | R | P | I | I | D | H | S |
| G | D | R | A | W | O | T | T | H | E | E | U |
| N | E | G | G | B | F | T | H | I | N | G | S |
| I | S | O | C | A | E | W | H | I | C | H | G |
| H | O | A | H | G | O | H | L | O | G | D | N |
| C | H | L | R | F | O | W | I | F | S | O | I |
| A | T | O | I | E | H | T | H | N | O | E | H |
| E | F | T | S | E | T | H | P | C | D | R | T |
| R | B | H | T | R | H | D | A | E | H | A | P |
| B | W | D | N | A | U | T | S | T | C | O | P |

**FORGETTING – THOSE – THINGS – WHICH – ARE – BEHIND – AND – REACHING – FORWARD - TO - THOSE - THINGS - ARE - AHEAD - I PRESS -TOWARD - THE - GOAL - FOR - THE - GOAL - FOR - THE - UPWARD - CALL - OF - GOD -IN - JESUS - CHRIST**